# ஒரு தவறான எண்ணம் அகற்றப்படுகிறது


உருது மூலம்

**ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை...) அவர்கள்**

*வாக்களிக்கப்பட்ட மஸீஹ் மற்றும் மஹ்தி*
*அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் நிறுவுனர்*

**தமிழாக்கம்**

**A.M.S.** முபாரக் அஹ்மது
சாத்தான்குளம்



வெளியிடுவோர்

தமிழக புத்தக வெளியீட்டுக் குழு
**அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்**
11, முதல் பிரதான சாலை, யு.ஐ. காலனி,
கோடம்பாக்கம், சென்னை- 600 024.




**Oru thavaraana ennam agatrappadugirathu**

Tamil version of

**Ek Ghalathi Ka Izala** (urdu)
By
Hadhrat Mirza Ghulam Ahmad


Published by :

**Tamilnadu Book Publishing Committee**
**AHMADIYYA MUSILM JAMA'ATH**
No. 11, First Main Road,
United India Colony, Kodambakkam,
Chennai - 600 024. Tamil Nadu.

بسم الله الرحمن الرحيم

# முன்னுரை

அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் தோற்றுனர் ஹஸ்ரத் **மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை)** அவர்கள் 1901 ஆம் ஆண்டு உருது மொழியில் எழுதிய **ஏக் கலத்தி கா இஸாலா** என்ற நூலின் தமிழாக்கமே **ஒரு தவறான எண்ணம் அகற்றப்படுகிறது** என்ற தலைப்பில் உங்கள் கையில் உள்ளது.

இந்நூலில் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் தமக்குக் கிடைத்த பதவி ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை முழுமையாகப் பின்பற்றியதனாலேயே அல்லாமல் சுயமாக கிடைத்தது அல்ல என்றும் தான் ஒரு உம்மத்தீ நபி என்றும் சுதந்திரமான ஷரீஅத்தை உடைய நபி அல்ல என்றும் தெளிவுபடுத்தியுள்ளார்கள். மேலும் அவர்கள் எழுதிய பல்வேறு நூல்களில் எங்கெல்லாம் தன்னுடைய நபித்துவத்தை மறுத்துள்ளார்களோ அது, தான் சுதந்திரமான ஷரீஅத்துடைய நபி அல்ல என்ற கருத்திலேயே ஆகும் என்பதை இந்நூலில் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

மேலும் இந்நூலை எழுதிய ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள், அகராதியின்படி **நபி** என்பதின் பொருள், இறைவன் புறமிருந்து அறிவு பெற்று, மறைவான விஷயங்களை மனிதர்களுக்கு அறிவிப்பவர் என்பதை நினைவிற் கொள்ளுங்கள்.எனவே எங்கு இந்தக் கருத்து பொருந்துமோ அங்கு நபி என்ற சொல்லும் பொருந்தும்.ஒருவர் **நபியாக** இருந்தால் அவர் **ரஸூலாக** இருக்கவேண்டியது கட்டாயமாகும். ஏனென்றால் அவர் ரஸூலாக இல்லாதிருந்தால் அவருக்கு தூய்மையான மறைவான விஷயங்கள் கிடைக்க முடியாது என்றும் குறிப்பிட்டுள்ளார்கள். மேலும் இதனை **அவன் தான் தேர்ந்தெடுத்த தூதரைத் தவிர தனது மறைவான ஞானத்தை எவருக்கும் வெளிப்படுத்துவதில்லை** என்ற திருக்குர்ஆனின் 72: 27, 28 வசனங்கள் உறுதி செய்கின்றன. மேற்கூறப்பட்ட திருக்குர்ஆன் வசனத்தின்படி ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பிறகு நபி வருவதை நாம் நிராகரிப்போமாயின் இந்த உம்மத்திற்கு இறைவனின் வார்த்தைகளையும், அருட்கொடைகளையும் பெறமுடியாத துர்பாக்கியம் ஏற்பட்டதென்று நம்பவேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. எவருக்கு இறைவன் புறமிருந்து மறைவான விஷயங்களைப் பற்றிய செய்தி கிடைக்குமோ அவர் இந்தத் திருக்குர்ஆன் வசனத்தின்படி **நபியாகவே** இருப்பார். அவ்வாறே எவர் இறைவன் புறமிருந்து அனுப்பப்படுகிறாரோ அவரையே நாம் ரஸூல் என்று கூறுகிறோம். இவற்றிற்கிடையிலுள்ள வேறுபாடு என்னவென்றால், ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பின் கியாம நாள் வரை ஒரு புதிய ஷரீஅத்தை உடைய நபி வர முடியாது. இவ்வாறே ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மூலமாகவே அல்லாமல் எவரும் தனிப்பட்ட முறையில் நபிப்பட்டம் பெற முடியாது என்றும் இந்நூலில் தமது வாதத்தைத் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

இந்நூலை தமிழில் மர்ஹூம் **A.M.S. முபாரக் அஹ்மது ஸாஹிப்** ( சாத்தான்குளம்)அவர்கள் மொழியாக்கம் செய்து அது சமாதான வழி மாத இதழில் தொடராக வெளிவந்தது. அதனை புத்தக வடிவில் இப்பொழுது வழங்குவதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

எல்லாம்வல்ல இறைவன் இதனை படிக்கின்ற நல்லுள்ளங்களுக்கு மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்களின் வாதத்தின் உண்மை நிலையை புரியக்கூடிய வாய்ப்பினை நல்குவானாக. ஆமீன்.

சென்னை - 10. 12. 2009 **வெளியீட்டாளர்**

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

نَحْمَدُهٗ وَ نُصَلِّی عَلٰی رَسُوْلِهِ الْکَرِیْمِ

# ஒரு தவறான எண்ணம் அகற்றப்படுகிறது

என்னுடைய ஜமாஅத்தைச் சார்ந்த சிலர், என்னுடைய வாதத்தைப்பற்றியோ, வாதத்திற்குரிய ஆதாரங்களைப் பற்றியோ சரியாகத் தெரியாமல் இருக்கின்றனர். இத்தகையவர்களுக்கு எனது புத்தகங்களை ஆராய்ந்து படிக்கக்கூடிய வாய்ப்பு கிடைக்காததாலும், ஒரு குறிப்பிட்ட காலம் என்னுடன் தங்கி உண்மையினை அறியக்கூடிய வாய்ப்பு கிடைக்காததாலும், சில வேளைகளில் எதிர்க்கின்றவர்களின் சில ஆட்சேபணைகளுக்கு உண்மைக்கு மாறான பதில்களைக் கொடுத்து விடுகின்றனர். இதனால் இவர்கள் உண்மையாளர்களாக இருந்தும் அவமானத்தைத் தேடிக்கொள்ள நேரிடுகின்றது.

இவ்வாறு சில நாள்களுக்கு முன் ஓர் அஹ்மதியிடம், நீர் எவரிடம் பைஅத் செய்திருக்கின்றீரோ அவர் தம்மை நபி என்றும் ரஸூல் என்றும் வாதிடுகின்றார் என்ற ஆட்சேபணையை எடுத்து வைத்தபோது, அந்த அஹ்மதி, அவ்வாறு அவர் வாதம் செய்யவில்லை என்று கூறிவிட்டார். இந்தப் பதில் சரியானதல்ல. உண்மை என்னவென்றால், இறைவனுடைய பரிசுத்தமான வஹி என் மீது இறங்கிக் கொண்டிருக்கிறது. அதில் அவன் என்னை

ரஸூல், முர்ஸல், நபி என்ற வார்த்தைகளைக் கொண்டு அழைத்திருக்கின்றான். இவ்விதம் ஒரு முறை, இரு முறையல்ல; நூற்றுக்கணக்கான முறையாக இறைவன் என்னை இவ்வாறு அழைக்கின்றான். இவ்வாறு இருக்கையில் இந்த வார்த்தைகள் என்மீது இறங்கவில்லை என்று சொல்லுவது எவ்வாறு உண்மையாகும். இன்னும் சொல்லப் போனால் தற்போது இந்த வார்த்தைகள் முன்பைவிட தெளிவாகவும் அடிக்கடியும் வருகின்றன. நான் 22 வருடங்களுக்கு முன்பு வெளியிட்ட பராஹீனே அஹ்மதிய்யாவிலும் இந்த வார்த்தைகள் ஏராளமாக உண்டு. அந்த வஹிகளில் ஒன்று, பராஹீனே அஹ்மதிய்யா 498-ம் பக்கத்தில் பின்வருமாறு உள்ளது:

هُوَ الَّذِیْ اَرْسَلَ رَسُوْلَهٗ بِالْهُدٰی وَ دِیْنِ الْحَقِّ لِیُظْهِرَهٗ عَلَی الدِّیْنِ کُلِّهٖ

(دیکھو ص ۴۹۸ براہین احمدیہ)

**(ஹுவல்லதீ அர்ஸல ரஸூலஹூ பில் ஹுதா வதீனில் ஹக்கி லியுள்ஹிரஹூ அலத்தீனி குல்லிஹீ)**

(பராஹீனே அஹ்மதிய்யா பக்கம் : 498)

அதாவது அவனே தனது தூதரை நேர்வழியுடனும் உண்மையான மார்க்கத்துடனும் இதனை அவன் எல்லா மார்க்கத்தின் மீதும் வெற்றி பெறச் செய்வதற்காக அனுப்பினான்.

இதில் இந்த எளியவன் ரஸூல் என்று தெளிவாக அழைக்கப்பட்டிருக்கிறான். இதே புத்தகத்தில் என்னைப் பற்றிய இன்னொரு வஹியும் இருக்கிறது:

جَرِیُّ اللّٰهِ فِیْ حُلَلِ الْاَنْبِیَآءِ

**(ஜரிய்யுல்லாஹி ஃபீஹுலலில் அன்பியா)**

(பராஹீனே அஹ்மதிய்யா, பக்கம்- 504)

அதாவது, நபிமார்களின் உடைகளில் வந்த அல்லாஹ்வின் வீரர். இதனை அடுத்து இதே புத்தகத்தில் இன்னொரு வஹியையும் காணலாம்:





مُحَمَّدٌ رَّسُوْلُ اللّٰهِ وَالَّذِیْنَ مَعَهٗ اَشِدَّآءُ عَلَی الْکُفَّارِ رُحَمَآءُ بَیْنَهُمْ

**(முஹம்மதுர் ரஸூலுல்லாஹி வல்லதீன மஅஹூ அஷித்தாவு அலல் குஃப்பாரி ருஹமாவு பைனஹும்)**

அதாவது முஹம்மது அல்லாஹ்வின் தூதராவார். அவருடன் இருப்பவர்கள் நிராகரிப்பவர்களுக்கு எதிரில் கடினமானவர்களும் தங்களுக்குள் மிக்க மென்மையாக நடந்து கொள்பவர்களும் ஆவார்கள்.

இறைவனின் இந்த வஹியில் என் பெயர் முஹம்மது என்றும் ரஸூல் என்றும் அழைக்கப்பட்டிருக்கிறது. மேலும் பராஹீனே அஹ்மதிய்யா 557-ம் பக்கத்தில் கீழ்க்காணும் வஹியையும் காணலாம்:

دنیا میں ایک نذیر آیا

**(துன்யாமே ஏக் நஸீர் ஆயா)**

அதாவது உலகத்தில் ஓர் எச்சரிப்பவர் வந்தார். இதுவே வேறு சொற்களில் உலகிற்கு ஒரு நபி வந்தார் என்றும் வந்துள்ளது. இவ்வாறே பராஹீனே அஹ்மதிய்யாவில் இன்னும் ஏராளமான இடங்களில் இறைவன் இந்த எளியவனை ரஸூல் என்று அழைத்திருக்கின்றான்.

ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்கள் காத்தமுன்னபிய்யீனாக இருப்பதால், அவர்களுக்குப் பிறகு நபி எவ்வாறு வரமுடியும் என்று கேட்கப்பட்டால், அதற்குரிய விடையாவது, ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்கள் இறுதிக்காலத்தில் தோன்றுவார்கள் என்று நீங்கள் கூறுவதைப் போன்று அப்படி எந்தவொரு பழைய நபியோ, புதிய நபியோ வர முடியாது. மேலும் ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்களை நபி என்றும் அவர்களுக்கு 40 வருடங்கள் தொடர்ச்சியாக வஹி வந்து கொண்டிருக்குமென்றும் நம்புகிறீர்கள். இது ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களின் நபித்துவத்தின் காலத்தை விட அதிகமான காலம் என்றும் நம்புகிறீர்கள். சந்தேகத்திற்கிடமின்றி இப்படிப்பட்ட நம்பிக்கை பாவமானதாகும். இந்தக் கொள்கை அப்பட்டமான பொய் என்பதற்கு

وَلٰكِنْ رَسُوْلَ اللّٰهِ وَ خَاتَمَ النَّبِيّٖنَ

**(வலாகின் ரஸூலல்லாஹி வகாத்தமன்னபிய்யீன்)**

அவர் அல்லாஹ்வின் தூதராகவும், நபிமார்களுக்கெல்லாம் காத்தம் (முத்திரை) ஆகவும் விளங்குகிறார் என்ற (33:41) திருக்குர்ஆன் வசனமும்

لَا نَبِیَّ بَعْدِیْ

**(லாநபிய்ய பஅதீ)**

எனக்கு எதிரான எந்த நபியுமில்லை என்ற நபிமொழியும் முழுமையான சாட்சியாக இருக்கின்றன. (புகாரி கிதாபுல் ஃபதாயில்)

ஆனால் நாம் இப்படிப்பட்ட நம்பிக்கைக்கு எதிராயிருக்கிறோம். கீழ்க்கண்ட திருக்குர்ஆன் வசனத்தின் மீது நாம் உண்மையான முழுமையான நம்பிக்கை வைத்திருக்கிறோம்.

وَلٰكِنْ رَسُوْلَ اللّٰهِ وَ خَاتَمَ النَّبِيّٖنَ

இந்த வசனத்தில் நம் எதிரிகளுக்கு தெரியாத ஒரு முன்னறிவிப்பு உள்ளது. அது என்னவென்றால், ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பிறகு முன்னறிவிப்புகளின் வாசல்கள் இறுதிக் காலம்வரை மூடப்பட்டுவிட்டன. எனவே எந்த மனிதனாலும் அவன் இந்துவாக இருந்தாலும், யூதனாக இருந்தாலும், கிறிஸ்தவனாக இருந்தாலும், பெயர் தாங்கி முஸ்லிமாக இருந்தாலும் தன்னை நபி என்று சொல்லிக் கொள்ள முடியாது. ஆனால் ஸீரத்தே சித்திக்கீ என்ற வாசலைத் தவிர நுபுவ்வத்தின் மற்றெல்லா வாசல்களும் அடைக்கப்பட்டுவிட்டன. அதாவது ஃபனாஃபிர் ரஸூல். ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மீது கொண்ட அன்பினால் அவர்களுடன் ஒன்றிவிடுதல் என்ற இந்த வழியால் எவர் இறைவனின் சன்னிதானத்தை அடைகின்றாரோ அவர் மீது நிழலுக்கு ஒப்பான நபித்துவத்தின் போர்வை போர்த்தப்படும். அது ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நபித்துவத்தின் ஒரு பகுதியேயல்லாமல் வேறில்லை.இவ்வாறு வாதிடுபவர் ஹஸ்ரத்





நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நபித்துவத்தை மீறுபவர் அல்லர். மேலும் அவர் இதனைத் தமது முயற்சியினாலோ, சுதந்திரமாகவோ பெற்றவர் அல்லர். மாறாக இது ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஊற்றிலிந்து பெற்ற அருளாகவே இருக்கும். இது அவருடைய மகிமைக்காக அல்ல; ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை மகிமைப்படுத்துவதற்காகவேயாகும். இதனால்தான் அவரது பெயர் வானத்தில் முஹம்மது என்றும் அஹ்மது என்றும் அழைக்கப்படுகின்றன. இதன் கருத்து, முஹம்மதின் நுபுவ்வத் – அது நிழலாக இருந்தாலும் சரியே- இறுதியில் அது முஹம்மதிற்குத் தான் கிடைத்திருக்கிறதே தவிர, வேறு எவருக்கும் அல்ல என்பதாகும். (அதாவது இவ்வாறு வாதிடுபவர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நிழலாக, அவர்களின் பண்புகளைப் பிரதிபலிப்பவராக இருக்கிறார்.)

مَا كَانَ مُحَمَّدٌ اَبَا اَحَدٍ مِنْ رِجَالِكُمْ وَ لٰكِنْ رَسُوْلَ اللّٰهِ وَ خَاتَمَ النَّبِيّٖنَ

**(மாகான முஹம்மதுன் அபா அஹதின் மிர் ரிஜாலிகும் வலாகிர் ரஸூலல்லாஹி வ காத்தமன்னபிய்யீன்)**

முஹம்மது உங்களுள் எந்த ஆணுக்கும் தந்தையல்ல. ஆனால் அவர் அல்லாஹ்வின் தூதராகவும், நபிமார்களுக்கெல்லாம் காத்தமாகவும் (முத்திரையாகவும்) விளங்குகின்றார். (33 :41) என்ற வசனத்தின் கருத்து,

ليس محمد ابا احد من رجال الدنيا ولكن هو اب لرجال الآخرة
لانه خاتم النبيين ولا سبيل الیٰ فيوض الله من غير توسطه

முஹம்மது இவ்வுலக மனிதர்களின் தந்தையல்ல. ஆனால் அவர் மறுவுலக மனிதர்களின் தந்தையாக இருக்கின்றார். ஏனெனில் அவர் நபிமார்களுக்கெல்லாம் முத்திரையாக இருக்கின்றார். இறைவனின் அருள்களை இவர் மூலமாக மட்டுமே பெறமுடியும் என்பதாகும்.

சுருங்கக் கூறுவதென்றால், நான் நுபுவ்வத்தையும், ரிஸாலத்தையும் பெற்றது, நான் முஹம்மதும் அஹ்மதும்

ஆனதினாலேயே அன்றி என் சுய தன்மையினால் பெற்றது அல்ல.நான் ஃபனாஃபிர் ரஸூல் ஆனதினாலே (ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிலே என்னை மாய்த்துக் கொண்டதனால்) எனக்கு இத்தகுதி கிடைத்தது. எனவே **காத்தமுன்னபிய்யீன்** (நபிமார்களின் முத்திரை) என்பதில் இதனால் யாதொரு மாற்றமும் ஏற்படவில்லை. ஆனால் சுதந்திரமான நபியாகிய ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்கள் இறங்குவதால் காத்தமுன்னபிய்யீன் என்பதற்கு கண்டிப்பாக மாற்றம் ஏற்படும். அகராதியின்படி **நபி** என்பதின் பொருள், இறைவன் புறமிருந்து அறிவு பெற்று, மறைவான விஷயங்களை மனிதர்களுக்கு அறிவிப்பவர் என்பதை நினைவிற் கொள்ளுங்கள்.எனவே எங்கு இந்தக் கருத்து பொருந்துமோ அங்கு நபி என்ற சொல்லும் பொருந்தும்.ஒருவர் **நபியாக** இருந்தால் அவர் **ரஸூலாக** இருக்கவேண்டியது கட்டாயமாகும். ஏனென்றால் அவர் ரஸூலாக இல்லாதிருந்தால் அவருக்கு தூய்மையான மறைவான விஷயங்கள் கிடைக்க முடியாது.

لَا يُظْهِرُ عَلٰى غَيْبِهٖ اَحَدًا اِلَّا مَنِ ارْتَضٰى مِنْ رَسُوْلٍ
(سورة الجن: آيت ٢٧)

**(லா யுல்ஹிரு அலா கய்பிஹீ அஹதன் இல்லா மனிர்தலா மிர் ரஸூலின்.)**

(இறைவன்) தான் தேர்ந்தெடுத்த தூதரைத் தவிர தனது மறைவான ஞானத்தை எவருக்கும் வெளிப்படுத்துவதில்லை (72:27, 28)என்ற திருக்குர்ஆன் வசனம் அதனைத் தடுக்கின்றது.

இப்போது இந்தப் பொருளில் (மேற்கூறப்பட்ட திருக்குர்ஆன் வசனத்தின்படி) ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பிறகு **நபி** வருவதை நாம் நிராகரிப்போமாயின் இந்த உம்மத்திற்கு இறைவனின் வார்த்தைகளையும், அருட்கொடைகளையும் பெறமுடியாத துர்பாக்கியம் ஏற்பட்டதென்று நம்பவேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. எவருக்கு இறைவன் புறமிருந்து மறைவான விஷயங்களைப் பற்றிய செய்தி கிடைக்குமோ அவர் இந்தத் திருக்குர்ஆன் வசனத்தின்படி **நபியாகவே** இருப்பார்.





அவ்வாறே எவர் இறைவன் புறமிருந்து அனுப்பப்படுகிறாரோ அவரையே நாம் **ரஸூல்** என்று கூறுகிறோம். இவற்றிற்கிடையிலுள்ள வேறுபாடு என்னவென்றால், ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பின் கியாம நாள் வரை புதிய ஷரீஅத்தை உடைய எந்தவொரு நபியும் வர முடியாது. இவ்வாறே ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மூலமாகவே அல்லாமல் எவரும் நபிப்பட்டம் பெற முடியாது. தம்மை ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களிலே ஃபனாவாக்கி (மாய்த்து) விடுவதால் தமது பெயர் வானத்தில் முஹம்மது என்றும் அஹ்மது என்றும் ஆகாதவரை எவரும் நுபுவ்வத்தின் பட்டத்தை நேரடியாகப் பெற முடியாது.

ومن ادعىٰ فقد كفر

**(வமனித்தஆ ஃபகத் கஃபர)**

(இந்த நிபந்தனையை நிறைவேற்றாது எவராவது தமது நபித்துவத்தைப் பிரகடனப் படுத்துவாராயின் அவர் காஃபிராவார்)

இதில் அடங்கியுள்ள இரகசியமென்னவென்றால் எவர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை விட்டு விலகி சுதந்திரமான முறையில் தமது நுபுவ்வத்தைப் பற்றி வாதிப்பாரோ அவர் காத்தமுன்னபிய்யீன் என்ற முத்திரையை உடைப்பவராய் இருக்கின்றார். காத்தமுன்னபிய்யீன் என்ற சொல், இந்த அர்த்தத்தையே வலியுறுத்துகின்றது. ஆனால் ஒருவர் காத்தமுன்னபிய்யீனோடு ஐக்கியப்பட்டு அவர்களை விட்டு விலகி தனி நபராகாமல், அவர்களிடம் மூழ்கி தமது முழு சாயலையும் தமது தனிப்பட்ட தன்மையையும் அவர்களுக்காக முற்றாய் அர்ப்பணம் செய்து அவர்களின் பெயரையே தாம் பெற்று விட்டால்,தெளிவான கண்ணாடியைப் போன்று முஹம்மதிய்ய முகம் அவரிடம் பிரதிபலித்து விட்டால், அத்தகையவர் காத்தமுன்னபிய்யீனின் முத்திரையைத் தகர்க்காமலேயே **நபி என்று அழைக்கப்படுவார்.** இப்படிப்பட்டவர் பிரதிபிம்பமாகக் காணப்படுவதால் அவர் முஹம்மதின் நிழலாகவே இருக்கின்றார். பிரதிபிம்பமாகத் தோன்றியவரின் பெயர் முஹம்மது என்றும், அஹ்மது என்றும் வருவதால் அவர் தம்மை நபி என்று கூறினாலும் முஹம்மது (ஸல்) அவர்கள் காத்தமுன்னபிய்யீனாகவே இருப்பார்கள். அவர்

முஹம்மது (ஸல்) அவர்களின் பிரதிபிம்பமாகவும், சாயலாகவும் அவரின் பெயரைப் பெற்றவராகவும் இருப்பார். ஆனால் **ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்கள் காத்தமுன்னபிய்யீன் முத்திரையை உடைக்காமல் வர முடியாது.** ஏனெனில் அவருடைய நுபுவ்வத் ஒரு தனிப்பட்ட நுபுவ்வத்தாகும்.

ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பிரதிபிம்பம் என்ற நிலையிலும் எவரும் நபித்துவத்தைப் பெற முடியாதென்றால்,

اهدنا الصراط المستقيم صراط الذين انعمت عليهم

**(இஹ்தி நஸ்ஸிராத்தல் முஸ்தகீம், ஸிராத்தல்லதீன அன் அம்த அலைஹிம்)**

(எங்களை நேரான பாதையில் நடத்துவாயாக. நீ அருட்கொடை அளித்தவர்களின் பாதையில்) என்ற இந்த வசனத்தின் பொருள் தான் என்ன?★(அடிக்குறிப்பு 1 காண்க)

எனவே மேற்சொன்ன கருத்தின்படி நான் நபித்துவத்தையும், ரிஸாலத்தையும் பெற்றவன் என்பதை மறுக்கவில்லை என்பதை நினைவிற் கொள்ளுங்கள். இதனால் தான் **ஸஹீஹ் முஸ்லிமிலும்**

*★ அடிக்குறிப்பு (1): கடந்த காலத்தில் நபி, ஸித்தீக் ஆகியவர்கள் பெற்றிருக்கும் எல்லா வகையான வெகுமதிகளும் இந்த உம்மத்தும் (முஹம்மதிய்ய உம்மத்தும்) பெற்றுக் கொள்ளும் என்ற வாக்குறுதி இங்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்பதை நினைவிற் கொள்ளவேண்டும். நபித்துவமும், முன்னறிவிப்புகளும் இந்த வெகுமதிகளில் உள்ளவைகளாக இருக்கின்றன. இதனாலேயே எல்லாத் தீர்க்கதரிசிகளும் நபி என்று அழைக்கப்பட்டார்கள். நபி, ரஸூலைத் தவிர வேறு எவருக்கும் மறைவான விஷயங்கள் அறிவிக்கப்படுவதைத் திருக்குர்ஆன் நிராகரிக்கின்றது. ஏனெனில்*

لَا يُظْهِرُ عَلٰى غَيْبِهٖۤ اَحَدًا اِلَّا مَنِ ارْتَضٰى مِنْ رَّسُوْلٍ

*லா யுல்ஹிரு அலா கய்பிஹீ அஹதன் இல்லா மனிர்தலா மிர் ரஸூலின்*

*தான் தேர்ந்தெடுத்த தூதரைத் தவிர இறைவன் தனது மறைவான ஞானத்தை எவருக்கும் வெளிப்படுத்துவதில்லை (72: 27, 28) என்ற*





**வாக்களிக்கப்பட்ட மஸீஹின் பெயர் நபி என்று அழைக்கப்பட்டிருக்கிறது.** இறைவன் புறமிருந்து மறைவான செய்தியைப் பெறுகிறவர் நபி என்ற பெயரைக் கொண்டு அழைக்கப் படாவிட்டால் பிறகு அவரை எப்பெயர் கொண்டு அழைப்பது? என்பதை நீங்களே கூறுங்கள். அவருடைய பெயரை முஹத்தஸ் என்று அழைக்க வேண்டுமென கூறுவீர்களேயானால் தஹ்தீஸ் என்பதன் பொருள் எந்த ஓர் அகராதியிலும் மறைவான விஷயத்தை அறிவிப்பதற்காக உபயோகிக்கப்படுவதில்லை என்பதை நான் கூறிக்கொள்கிறேன். ஆனால் நுபுவ்வத்தின் அர்த்தம் மறைவான விஷயத்தை அறிவித்தல் என்பதாகும். நபி என்ற சொல் அரபு மொழிக்கும், எபிரேய மொழிக்கும் பொதுவானதாகும். எபிரேய மொழியில் இந்தச் சொல் நாபி என்று உச்சரிக்கப்படுகிறது. இது நபா என்ற மூலச்சொல்லிலிருந்து உருவானதாகும். இதன் பொருள் இறைவன் புறமிருந்து செய்தி பெற்று முன்னறிவிப்பு செய்பவர் என்பதாகும். மேலும் ஒருவர் நபியாவதற்கு அவர் ஒரு புதிய ஷரீஅத் கொண்டு வரவேண்டும் என்பது அவசியமில்லை. நுபுவ்வத் மூலமாகவே ஒருவருக்கு மறைவான விஷயங்கள் வெளிப்படுகின்றன. இது ஒரு தெய்வீக சன்மானமாகும். எனவே **இன்றைய நாள் வரை நான் ஏறக்குறைய 150 முன்னறிவிப்புகளை இறைவன் புறமிருந்து பெற்று, அவை**

*வசனத்திலிருந்து இதை விளங்குகின்றோம். எனவே இரகசியத்தின் தெளிவான ஞானத்தைப் பெறுவதற்கு நபியாக வேண்டியது மிகவும் அவசியம். மேலும் அன் அம்த அலைஹிம் - (உன்னுடைய அருளைப் பெற்றவர்கள்) என்ற வசனம், இதற்குச் சாட்சி பகர்கின்றது. அதாவது இந்த உம்மத் மறைவான விஷயத்தின் தெளிவான ஞானத்தைப் பெறுவதிலிருந்து விலக்கப்படவில்லை என்பதை உணர்த்துகிறது. மறைவான விஷயத்தின் செய்தியை நபியும் ரஸூலுமே பெற முடியும். எனினும் இதனைச் சுதந்திரமாக நேரடியாகப் பெறுவது தடுக்கப் பட்டிருக்கிறது. இந்த அருட்கொடையை ஒருவர் பெறுவதற்கு அவர் காத்தமுன்னபிய்யீன் (ஸல்) அவர்களின் பிரதிபிம்பமாவதும், அவர்களுடன் தம்மை முழுமையாக ஒன்றச் செய்து அவர்களின் மகிமைகளைத் தம்மிடம் பிரதிபலிக்கச் செய்வதும் அவசியமான நிபந்தனை ஆகும் என்பதில் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். எனவே சிந்தியுங்கள்.*

**தெளிவாக நிறைவேறியிருப்பதை என் கண்களால் நானே கண்டிருக்கும் போது, நான் எவ்வாறு என்னை நபி அல்லது ரஸூல் என்று கூறிக்கொள்வதை நிராகரிப்பேன்?**

இறைவனே எனக்கு இப்பெயர்களைச் சூட்டியிருக்கும்போது அவற்றை நிராகரிப்பதற்கு நான் யார்? அல்லது இறைவனுக்கு எதிராக மற்றவர்களுக்கு நான் ஏன் அஞ்சவேண்டும்? **எந்த இறைவன் என்னை அனுப்பியுள்ளானோ, எந்த இறைவன் மீது இட்டுக்கட்டிக் கூறுவது சாபத்திற்குரியவர்களின் வேலையோ அந்த இறைவன் மீது ஆணையாக! அவனே என்னை வாக்களிக்கப்பட்ட மஸீஹாக அனுப்பியிருக்கின்றான்.**

மேலும் நான் எவ்வாறு திருக்குர்ஆனின் வசனங்கள் மீது நம்பிக்கை கொண்டிருக்கின்றேனோ அவ்வாறே என்மீது இறைவன் இறக்கும் வஹியின் (தெளிவான இறைவெளிப்பாட்டின்) மீதும் ஓர் அணு அளவும் வித்தியாசமின்றி நம்பிக்கை கொண்டிருக்கின்றேன். தொடர்ச்சியாக வந்து கொண்டிருக்கும் அவனது அடையாளங்களால் இந்த இறைவெளிப்பாட்டின் உண்மை எனக்கு தெளிவாக்கப் பட்டிருக்கிறது. **என் மீது இறங்குகின்ற இந்தத் தூய இறை வெளிப்பாடுகள், ஹஸ்ரத் மூஸா (அலை), ஹஸ்ரத் ஈஸா (அலை), ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) ஆகியவர்களுக்குத் தன் வார்த்தைகளை இறக்கிய அதே இறைவனின் வார்த்தைகளே என்பதை நான் மக்காவிலுள்ள பைத்துல்லாஹ்வில் நின்று கொண்டு சத்தியம் செய்யத் தயாராக இருக்கின்றேன்.**

எனக்காக பூமியும் சாட்சி பகர்ந்தது; வானமும் சாட்சி பகர்ந்தது. இவ்வாறே நான் அல்லாஹ்வின் கலீஃபாவாக இருக்கிறேன் என்பதை வானமும் பூமியும் சாட்சி கூறின. ஆனால் முன்னறிவிப்பு களுக்கு ஏற்ப நான் (மக்களால்)மறுக்கப்படுவதும் கட்டாயமானதாக இருந்தது. எனவே எவர்களின் மனம் திரையிடப்பட்டிருக்கிறதோ அவர்கள் என்னை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். எப்பொழுதும் இறைவன் தன்னுடைய ரஸூல்மார்களுக்கு உதவி புரிந்து வந்திருப்பது போல் எனக்கும் உதவி புரிவானென்பதை நான் அறிவேன். என்னை எதிர்த்து நிற்க எவராலும் முடியாது. ஏனெனில் இறைவனின் ஆதரவு அவர்களுக்கில்லை.

நான் எங்கெல்லாம், எப்பொழுதெல்லாம் என்னை நபியென்றும்





ரஸூலென்றும் அழைப்பதை மறுத்திருக்கின்றேனோ அங்கெல்லாம் நான் ஒரு புதிய ஷரீஅத்தைக் கொண்டுவரக் கூடியவனாகவோ ஒரு சுதந்திரமான நபியாகவோ வரவில்லை என்ற பொருளிலேயேயாகும்.ஆனால் மிகவும் மகிமை பெற்ற கண்ணியமுள்ள என் எஜமானராகிய ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்)அவர்களைப் பின்பற்றி அவர்களின் ஆத்மீக அருட்களால் நான் பலனடைந்தேன். அவர்களின் பெயரை நான் பெற்றுக்கொண்ட காரணத்தாலும். அன்னாரின் மூலமாக மறைவான விஷயங்களைப் பற்றிய ஞானம் எனக்கு அருளப்பட்ட காரணத்தாலும் இதன்படி நான் நபியாகவும், ரஸூலாகவும் இருக்கிறேன். ஆனால் **நான் ஒரு புதிய ஷரீஅத்தைக் கொண்டு வராத நிலையில் என்னை நபி என்று கூறிக்கொள்வதை ஒருபோதும் மறுத்ததில்லை.** இதே பொருளின்படியே இறைவன் என்னை நபி என்றும் ரஸூல் என்றும் அழைத்திருக்கின்றான். எனவே இந்தப் பொருளில் நான் என்னை நபியாகவும் ரஸூலாகவும் இருப்பதை தற்பொழுதும் மறுக்கவில்லை.

من نیستم رسول ونیاوردہ ام کتاب

என்று நான் கூறியுள்ளதன் பொருள் நான் ஷரீஅத்தைக் கொண்டு வந்த நபியல்ல என்பதேயாகும். நிச்சயமாக **நான் நபி ரஸூல் என்ற வார்த்தைகளால் அழைக்கப்பட்ட போதிலும் இந்த எல்லா சிறப்புகளும் சுதந்திரமான முறையினாலோ, எவருடைய வழியினாலுமில்லாமல் நேரடியாகவோ எனக்குக் கொடுக்கப்படவில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள்.** இந்த எல்லாச் சிறப்புகளும் வானத்தைச் சேர்ந்த பரிசுத்த மகானான ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களின் ஆத்மீகமான ஐக்கியத்தை நான் அடைந்த காரணத்தினாலேயே கிடைத்தன. அவர்களின் மூலமாக, அவர்களிலே நான் ஃபனாவாகி (அவர்களுக்காக நான் அர்ப்பணமாகி) அவர்களின் பெயராகிய முஹம்மது, அஹ்மது என்ற பெயர்களால் அழைக்கப்பட்ட காரணத்தால் நான் ரஸூலாகவுமிருக்கிறேன்; நபியாகவுமிருக்கிறேன். அதாவது இறைவனால் அனுப்பப்பட்டவனாகவும், இறைவன் புறமிருந்து

மறைவான விஷயங்களையும், செய்திகளையும் பெற்றவனாகவும் இருக்கின்றேன்.

இவ்வாறாகவே காத்தமுன்னபிய்யீன் என்பதன் முத்திரை பாதுகாக்கப்பட்டது. ஏனெனில் நான் பிரதிபிம்பமான முறையிலும், ஒரு நிழல் போன்ற முறையிலும் அன்பென்னும் கண்ணாடியின் வழியாக அதே பெயர்களை நான் பெற்றிருக்கிறேன். எவரேனும் இறைவனுடைய இந்த வெளிப்பாட்டின் மீது கோபம் கொண்டு இறைவன் என் பெயரை நபி என்றும் ரஸூலென்றும் ஏன் கூறினான்? என்று கேட்பார்களாயின் அது அவர்களின் மடமையாகும். ஏனெனில் நான் நபியானதாலும், ரஸூலானதாலும், இறைவனுடைய இந்த முத்திரை உடைந்து போகவில்லை. ✸ (அடிக்குறிப்பு 2 காண்க)

இறைவன் என்னை ரஸூல் என்றும் நபி என்றும் அழைத்திருக்கிறான் என்று நான் என்னை பற்றிக் கூறுவது போல் எனது எதிரிகளும் ஹஸ்ரத் ஈஸப்னு மர்யமைப் பற்றி அவர்கள் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பிறகு உலகத்திற்கு மீண்டும் வருவாரென்று கூறுகிறார்கள். ஈஸா (அலை) அவர்கள் நபியாக இருப்பதால் என்மீது கூறப்படும் அதே ஆட்சேபணை அவர் மீண்டும் வருவதால் அவர் மீதும் கூறப்படும் என்பது தெளிவாகத் தெரிகின்றது. அதாவது காத்தமுன்னபிய்யீன் என்பதிலுள்ள கதமிய்யத்தின் முத்திரை இதனால் தகர்ந்துபோகும். ஆனால்

---

✸அடிக்குறிப்பு 2. இவ்வழியால் காத்தமுன்னபிய்யீன் என்பதற்கான முன்னறிவிப்பின் முத்திரை உடையவில்லை என்பது எவ்வளவு அழகாக விவரிக்கப்பட்டுள்ளது! லா யுல்ஹிரு அலா கய்பிஹீ அஹதன் இல்லா மனிர்தலா மிர் ரஸூலின். தான் தேர்ந்தெடுத்த தூதரைத் தவிர இறைவன் தனது மறைவான ஞானத்தை எவருக்கும் வெளிப்படுத்துவதில்லை. (72: 27,28) என்ற இந்தத் திருக்குர்ஆன் வசனத்திலுள்ள நுபுவ்வத்தை ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உம்மத்து இழக்கவில்லை என்பதும் எவ்வளவு அழகான விஷயமாக இருக்கிறது! ஆனால் இஸ்லாம் மார்க்கம் தோன்றுவதற்கு 600 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த ஒரு சுதந்திரமான நுபுவ்வத்தைப் பெற்ற ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்கள் இரண்டாம் முறையாக இப்பூமியில் இறங்குவதால்





உண்மையான காத்தமுன்னபிய்யீனாகிய ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் பிறகு நான் ரஸூல், நபி என்ற வார்த்தைகளால் அழைக்கப்படுவதால் அதில் எந்த விதமான ஆட்சேபணைக்கும் இடமில்லை. இதனால் கதமிய்யத்தின் முத்திரையும் தகர்க்கப்படுவதில்லை என்பதை மீண்டும் கூறிக் கொள்கிறேன். ஏனெனில்,

وَ آخَرِينَ مِنْهُمْ لَمَّا يَلْحَقُوا بِهِمْ

(سورة الجمعة آيت:٤)

**(வஆஹரீன மின்ஹும் லம்மா யல்ஹகூபிஹிம்)**

(மேலும் இதுவரை அவர்களுடன் சேராத மற்றவர்களுக்கிடையிலும் (அவரை எழுப்புவான்) என்ற (62:3) திருக்குர்ஆன் வசனத்தின்படி **பிரதிபிம்பமான முறையில்** நான் அதே காத்தமுல் அன்பியாவாக இருக்கிறேன் என்பதை நான் பலமுறையும் கூறியுள்ளேன். மேலும் இன்றிலிருந்து 20 ஆண்டுகளுக்கு முன் நான் வெளியிட்ட பராஹீனே அஹ்மதிய்யா என்ற நூலில் என் பெயரை இறைவன் முஹம்மது என்றும் அஹ்மது என்றும் கூறி, எனது வருகையை ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களின் வருகை என்றே கூறியுள்ளான்.

---

இஸ்லாத்தின் மகத்துவம் கொஞ்சமும் மீதியிருக்காது. இதனால் காத்தமுன்னபிய்யீன் என்ற வசனத்தை பொய்ப்படுத்துவது கட்டாயமானதாகிவிடும். இவ்வாறு நாம் கூறுவதால் எதிரிகள் நம்மைத் திட்டுவார்கள். அவர்கள் இயன்ற அளவு திட்டட்டும், அதையும் கேட்போம்.

وسيعلم الذين ظلموا اى منقلب ينقلبون

**வஸயஃலமுல்லதீன ழலமூ அய்ய முன்கலபின் யன்கலிபூன்**
(26:228)

(அநீதியிழைப்பவர்கள் தாங்கள் திரும்பிச் செல்ல வேண்டிய இடத்தை நிச்சயமாக விரைவில் தெரிந்து கொள்வார்கள்.)

எனவே இவ்விதமான என் நுபுவ்வத்தினால் ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களின் காத்தமுல் அன்பியா என்ற நுபுவ்வத்திற்கு எந்த விதமான பாதிப்பும் ஏற்படவில்லை. ஏனெனில் நிழல் தன் மூலப் பொருளிலிருந்து வேறானதல்ல.நான் முஹம்மது (ஸல்) அவர்களின் நிழலாயிருப்பதால் காத்தமுன்னபிய்யீனின் முத்திரை உடையவில்லை. ஏனெனில் முஹம்மது (ஸல்) அவர்களின் நுபுவ்வத் முஹம்மதிலே கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. அதாவது முஹம்மது (ஸல்) அவர்களே நபியாயிருக்கிறார்கள். வேறு ஒருவருமல்ல. நான் பிரதிபிம்பமான முறையில் (நிழலாக) முஹம்மது (ஸல்) அவர்களாகவே இருக்கும் போதும், அவ்வாறே முஹம்மதிய்ய நுபுவ்வத் உட்பட முஹம்மதின் எல்லா முழுமை தன்மைகளும் நிழல் என்னும் என் கண்ணாடியில் பிரதிபிம்பமாயிருக்கும் போதும், ஒரு தனிப்பட்ட சுதந்திரமான முறையில் நுபுவ்வத்திற்காக வாதாடும் ஒரு தனி மனிதனாக எவ்வாறு என்னால் இருக்க முடியும்?

**நீங்கள் என்னை நிராகரித்தால், ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஹதீஸ்களையும் நிராகரிக்கின்றவர்களாக ஆவீர்கள்.** அந்த ஹதீஸ்களில் வாக்களிக்கப்பட்ட மஹ்தி உருவத்திலும் ஆன்மீக தன்மையிலும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் போல் காணப்படுவதால் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எப்பெயரால் அழைக்கப்பட்டார்களோ அதே பெயரால் மஹ்தியும் அழைக்கப்படுவாரென்று கூறப்பட்டுள்ளது. அதாவது அவர் முஹம்மது என்றும் அஹ்மது என்றும் அழைக்கப்படுவார் என்றும் அவர்களின் குடும்பத்தின் ஒரு நபராக இருப்பார் என்றும் ஹதீஸ்களில் விளக்கமாகவும் வந்திருக்கின்றது.✸ (அடிக்குறிப்பு 3 காண்க)

✸அடிக்குறிப்பு 3: எனது முப்பாட்டிகளில் ஒருவர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மகளாகிய ஹஸ்ரத் ஃபாத்திமா (ரலி) அவர்களின் வம்சத்தைச் சார்ந்த மகத்துவமுள்ள செய்யிது வம்சத்தைச் சேர்ந்தவர் என்பது வரலாற்று ரீதியாக நிரூபிக்கப்பட்ட விஷயமாக இருக்கிறது. இதனை ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் உண்மைப்படுத்தி இருக்கிறார்கள். நான் கண்ட ஒரு தெய்வீகக் காட்சியில் அவர்கள் என்னை நோக்கி ஸல்மான் என்று அழைத்திருக்கிறார்கள்.





சில ஹதீஸ்களில் அவர் என்னிலிருந்து தோன்றுவார் என்று வருகிறது.(காண்க: அபூதாவூது, கிதாபுல்மஹ்தி-வெளியீட்டாளர்) ஆத்மீக தன்மையில் அவர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் இன்றியமையாத ஒரு பகுதியாகவும் அவர்களின் ஆவியின் தோற்றமாகவும் திகழ்வார் என்ற நுணுக்கமான கருத்தும் அதற்கான அறிகுறிகளும் இந்த ஹதீஸில் அடங்கியிருக்கிறது.

سلمان منّا اهل البيت علىٰ مشرب الحسن

(ஸல்மானே! நீர் நமது குடும்பத்தைச் சேர்ந்தவர், ஹஸனின் வம்சத்திலுள்ளவர்)

அதாவது இரண்டு சில்ம். மேலும் சில்ம் என்பது அரபியில் சமாதானத்திற்கு கூறப்படும். (இதன்படி இரண்டு சமாதானங்கள் என்று பொருள்.) அதாவது என்னுடைய கையினால் இருவிதமான சமாதானம் உண்டாகும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. அதில் முதலாவது அந்தரங்கமான சமாதானம். அதனால் உள்ளத்திலுள்ள பொறாமை, வெறுப்பு முதலான தீய குணங்கள் அகற்றப்படும். இரண்டாவது வெளிப்படையான சமாதானம். அது வெளியிலிருந்து வரும் பகைமை, எதிர்ப்பு முதலான கெடுதிகளை அகற்றி இஸ்லாத்தின் மகிமையைக் காட்டுவதால் அது மாற்று மதத்தவர்களை இஸ்லாத்தின் பக்கம் வரவழைக்கச் செய்யும். ஹதீஸில் ஸல்மான் என்று வந்திருப்பதும் என்னையே குறிக்கின்றது என்பது தெளிவான ஒன்று. ( காண்க: அல் முஸ்தத்ரக் அலஸ் ஸஹீஹைன், கிதாப் மஃரிஃபத்துஸ்ஸஹாபா, திக்ரே சல்மான் ஃபார்ஸி-வெளியீட்டாளர்.) ஏனெனில் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் சஹாபியாயிருந்த ஸல்மான் (ரலி) அவர்கள் மீது இந்த இரு சமாதானங்களைப் பற்றிய முன்னறிவிப்பு நிறைவேறவில்லை. நான் பாரசீக வமிசத்தைச் சேர்ந்தவனென்று இறைவன் புறமிருந்து பெற்ற வஹீயின் மூலம் கூறுகிறேன். கன்சுல் உம்மாலில் வந்த ஹதீஸின்படி பாரசீக வமிசத்தைச் சேர்ந்தவர் இஸ்ரவேல் மக்களைச் சேர்ந்தவராகவும், அஹ்லே பைத்தைச் சார்ந்தவராகவும் இருக்கின்றார் எனத் தெரிகிறது. (காண்க: கன்ஸுல் உம்மால் தொகுதி 12 ஹதீஸ் எண் 34132, 34133 -வெளியீட்டாளர்.) நான் ஒரு **ஆத்மீக காட்சியில்** ஹஸ்ரத் ஃபாத்திமா (ரலி) அவர்கள், தங்கள் மடியின் மீது என் தலையை வைப்பதாகக் கண்டேன். இதன் பொருள், நான் அவர்களின் இரத்த இனத்தில் உள்ளவனாக இருக்கின்றேன் என்பதேயாகும். இந்த ஆத்மீகக் காட்சியைப் பற்றி பராஹீனே அஹ்மதிய்யா என்ற நூலில் காண முடியும்.(✸அடிக்குறிப்பு 3 ற்கான அடிக்குறிப்பு பின் பக்கம் காண்க)

ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்கள் எந்த வார்த்தைகளைக் கொண்டு இந்த உறவை விளக்கியிருக்கிறார்களோ அவ்வார்த்தைகளே நான் கூறும் இந்த வாதத்திற்குத் தெளிவான அத்தாட்சியாகும். இந்த விளக்கத்தில் அவர்கள் இருவரின் பெயரும் ஒன்றாயிருக்கின்றது. ஹஸ்ரத் மூஸா (அலை) அவர்களின் பிரதிபிம்பமாக யோசுவா (Joshua) தோன்றியது போல் ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களின் பிரதிபிம்பமாக வாக்களிக்கப்பட்ட மஸீஹ் தோன்றுவாரென்று அவர்கள் என்னைப் பற்றிக் கூறும் இவ்வார்த்தைகளிலிருந்து தெளிவாகின்றது. ஒருவருடைய பிரதிபிம்பமாகக் திகழ்கின்றவர் அவருடைய மகனாகவோ, பேரனாகவோ இருக்க வேண்டுமென்பது அவசியமில்லை. ஆனால் ஆத்மீக உறவைப் பொருத்தமட்டில் பிரதிபிம்பத்தைப் பெற்றவர் பிரதிபிம்பத்தை உடையவரிலிருந்து தோன்றியவராக இருக்கவேண்டும் என்பது மிகவும் அவசியமாகும். இவ்விருவருக்கும் இடையில் பரஸ்பர ஈர்ப்புத்தன்மையும் நெருங்கிய உறவும் நிரந்தரமாயிருக்க வேண்டும் என்பதும் அவசியமாகும். எனவே ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்)

★அடிக்குறிப்பு 3 ற்கான அடிக்குறிப்பு:

பராஹீனே அஹ்மதிய்யா என்ற நூலில் இந்த கஷ்ஃப் (ஆன்மீகக் காட்சி) இந்த சொற்களில் குறிப்பிடப்பட்டுள்ளது:

“மேலும் அவ்வாறே மேற்குறிப்பிட்ட இறையறிவிப்பில் ரஸூல் (ஸல்) அவர்களின் குடும்பத்தார் மீது சலவாத் ஓதுமாறு கட்டளை உள்ளது. இதில் உள்ள இரகசியம் என்னவெனில், இறை ஒளியிலிருந்து பயன்பெறுவதில், அஹ்லே பைத் (முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்பத்தார்) மீது நேசம் கொண்டிருப்பதற்கும் மகத்தான தொடர்பு இருக்கிறது. எவர் இறைவனின் நெருக்கத்தைப் பெற்றவர்களைச் சார்ந்தவராக இருக்கின்றாரோ அவர் இந்த தூய, பரிசுத்தமானவர்களின் வாரிசைப் பெறுகின்றார். எல்லா கல்வியிலும், இறை ஞானங்களிலும் அவர்களின் வாரிசாகின்றார்.

இவ்விடத்தில் எனக்கு மிகவும் ஒளிமிக்க ஒரு கஷ்ஃப் (ஆன்மீகக் கனவு) நினைவிற்கு வருகிறது. அதாவது, ஒருமுறை மக்ரிப் தொழுகைக்குப் பிறகு நன்றாக விழிப்புணர்வுடன் இருக்கும்போது





அவர்கள் பிரதிபிம்பத்தின் பொருளை வெளிப்படுத்தும் வசனத்தைக் கூறாது வாக்களிக்கப்பட்டவர் என் பேரர்களில் ஒரு பேரராக இருப்பார் என்று கூறினார்கள் என்பதை மட்டும் கூறி மறுப்பது ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களின் மேலான ஞானத்திற்கு முற்றிலும் மாறான கொள்கையாகும். பேரனாக இருப்பதற்கும் பிரதிபிம்பமாவதற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது?

பிரதிபிம்பமாக ஒருவர் ஆவதற்கு இந்த உறவு முறையே அவசியம் என்றால் பின் நெருங்கிய உறவல்லாத பேரன் என்ற உறவு முறையை ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஏன் தேர்ந்தெடுக்க வேண்டும்? மகன் என்ற உறவு முறையே இயல்பான தேர்வாக இருந்திருக்க வேண்டும். ஆனால் இறைவன் திருக்குர்ஆனில் ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்கள் பௌதீகமான முறையில் யாருடைய தகப்பனாராகவும் இருப்பதை முற்றிலும் மறுத்திருக்கின்றான். மறுபுறம் அவர்களின் பிரதிபிம்பத்தில் தோன்றக்கூடிய ஒருவரைப் பற்றியும் அறிவித்திருக்கிறான். பிரதிபிம்பமாகத் தோன்றுகிறவரைப் பற்றிய விஷயம் சரியற்றதென்றால்,

மறைவிலிருந்து ஒரு மயக்கத்திற்கு ஒப்பான நிலையில் வியப்பான உலகம் தோன்றியது. முதலில், ஒருமுறை சிலர் விரைவாக வரும் சத்தம் கேட்டது. விரைவாக நடக்கும்போது காலணிகள், காலுறைகளின் சத்தம் வருவது போன்ற சத்தம் கேட்டது. பிறகு ஐந்து பேர் மிகவும் கம்பீரமான, செல்வாக்கு பெற்ற, அழகிய தோற்றமுடையவர்கள் வந்தனர். அதாவது ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள், ஹஸ்ரத் அலி, ஹஸ்ரத் ஹஸன், ஹஸ்ரத் ஹுஸைன், ஹஸ்ரத் ஃபாத்திமதுஸ் ஸுஹ்ரா (ரலியல்லாஹு அன்ஹும் அஜ்மயீன்) ஆகியோர். மேலும் அவர்களில் ஒருவர், ஹஸ்ரத் ஃபாத்திமா (ரலி) அவர்கள் என நினைவுக்கு வருகிறது. அவர்கள் மிகவும் பரிவுடனும் பாசத்துடனும் **பாசமுள்ள தாயைப் போன்று** இந்த எளியவனின் தலையை தமது மடியில் வைத்துக் கொண்டார்கள். பின்னர், இதற்கு ப் பிறகு எனக்கு ஒரு நூல் வழங்கப்பட்டு, இது குர்ஆனின் விளக்கவுரையாகும்; இதனை ஹஸ்ரத் அலி (ரலி) அவர்கள் இயற்றியுள்ளார்கள்; இப்போது ஹஸ்ரத் அலி (ரலி) அவர்கள் இந்த குர்ஆன் விளக்கவுரையை உமக்கு வழங்குகின்றார் எனக் கூறப்பட்டது. ஃபல்ஹம்து லில்லாஹி அலா ஸாலிக். ” (காண்க: பராஹீனே அஹ்மதிய்யா பக்கம் 575-576 அடிக்குறிப்பின் கீழ் அடிக்குறிப்பு)

وَ آخَرِيْنَ مِنْهُمْ

**(வ ஆஹரீன மின்ஹுூம்)**

(மேலும் இதுவரை அவர்களுடன் சேராத)

என்ற இந்த (62:4)வசனத்தில் வாக்களிக்கப்பட்டவரின் தோழர்களை தமது சஹாபாக்களாக ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஏன் கூறினார்கள்? மேலும் பிரதிபிம்பமாகத் தோன்றுதல் என்ற கருத்தை மறுப்பதனால் இவ்வசனம் பொய்ப்படுத்தப்படுகிறது.

பௌதீகமான பொருள் கொள்ளும் மக்கள் வாக்களிக்கப்பட்டவர் ஹஸன் (ரலி) அவர்களின் சந்ததியில் தோன்றுவாரென்றும் ஹுூஸைன் (ரலி) அவர்களின் சந்ததியில் தோன்றுவார் என்றும், சிலர் அப்பாஸ் (ரலியல்லாஹுூ அன்ஹுூமா) அவர்களின் சந்ததியில் தோன்றுவார் என்றும் கூறுகின்றனர். ஆனால் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மேற்சொன்ன முன்னறிவிப்பைப் பற்றி கொண்டிருந்த கருத்து வாக்களிக்கப்பட்டவர் தங்கள் பிள்ளைகளைப் போல் தங்கள் வாரிசாகவே திகழ்வார் என்பதேயாகும். அதாவது அவர்களின் பெயர்களின் வாரிசாக, அவர்களின் குண இயல்புகளின் வாரிசாக, அவர்களின் ஞானத்தின் வாரிசாக, அவர்களின் ஆத்மீக தன்மையின் வாரிசாக வாக்களிக்கப்பட்டவர் திகழ்வார் என்பதேயாகும்.

எனவே ஒவ்வொரு வகையிலும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பிரதிபிம்பத்தை வாக்களிக்கபட்டவர் தன்னுள் காட்டுவார்; அவர் சுயமாக இக்குண இயல்புகளைக் காட்டுவதில்லை. மாறாக எல்லாவற்றையும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் புறமிருந்தே பெறுவார். தாம் அவர்களிலே ஃபனாவாகி (மாய்ந்து, அர்ப்பணமாகி) அவர்களின் முகத்தையே பிரதிபலிப்பவராக திகழ்வார். எனவே அவர் நிழலாக ஹஸ்ரத் நபி(ஸல்) அவர்களின் பெயரைப் பெறுவதைப் போன்று, அன்னாரின் பண்புகளை பெறுவதைப் போன்று, அன்னாரின் ஞானத்தைப் பெறுவதைப் போன்று அவருடைய நபிப்பட்டத்தையும் பெறுவார். இந்த பிரதிபிம்பமான தன்மை ஒருவரில் முழுமையாகப் பிரதிபலிக்கும்வரை அவரிடம் உள்ள இதன் முழுமையான ஒளி





வெளியில் காணப்படமாட்டாது. எனவே நுபுவ்வத்தும் நபியின் ஒரு முழுமையான தன்மையாகத் திகழ்வதால் இந்தப் பிரதிபிம்ப சாயலும் முழுமையான தன்மையில் வெளியாக வேண்டியது அவசியம். பிரதிபிம்பத்தினாலான உருவம் தன் மூலப் பொருளின் முழுமையான சாயலாயிருக்க வேண்டும் என்பதை எல்லா நபிமார்களும் நம்பி வந்திருக்கிறார்கள். இதனால் இவ்விரண்டின் பெயரும் ஒன்றாக ஆகிவிடுகிறது.

எனவே பிரதிபிம்பமான முறையில் அவர் முஹம்மது என்றும் அஹ்மது என்றும் அழைக்கப்பட்டதால் எவ்வாறு அவர் இரண்டு முஹம்மதும் இரண்டு அஹ்மதும் ஆகவில்லையோ அவ்வாறே பிரதிபிம்பமான முறையில் அவர் நபி என்றும் ரஸுூல் என்றும் அழைக்கப்பட்டதால் காத்தமுன்னபிய்யீன் என்ற முத்திரை உடைந்து விடவில்லை என்று இதிலிருந்து தெரிய வருகிறது. ஏனெனில் பிரதிபிம்பம் என்பது தனிப்பட்ட ஒன்றல்ல. இவ்வாறு முஹம்மது என்ற பெயரின் நுபுவ்வத் ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களிடமே கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. பிரதிபிம்பமான தன்மையில் இரட்டை உண்டாவதில்லை என்பதை எல்லா நபிமார்களும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். பிரதிபிம்பத்தின் தகுதி கீழ்வரும் வார்த்தைகளால் விவரிக்கப்பட்டுள்ளது:

من تو شدم تو من شدی من تن شدم تو جاں شدی
تا کس نگوید بعد ازیں من دیگرم تو دیگری

(இந்த பாரசீக சொல் வழக்கின் பொருள்: நான் உன்னைப் போலானேன். நீ என்னைப் போலானாய். நான் உடலானேன். நீ அதன் உயிரானாய். இதற்குப் பிறகு நான் உன்னிலிருந்து வேறுபட்டவனாக இருக்கிறேன் என்று எவராலும் கூற முடியாது.)

ஆனால் ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்கள் இரண்டாம் முறை இவ்வுலகத்திற்கு வருவதால் காத்தமுன்னபிய்யீன் என்ற முத்திரை உடைந்துபோகும். அந்த முத்திரையை உடைக்காமல் அவரால் எவ்வாறு வரமுடியும்? சுருங்கக் கூறுவதென்றால்

காத்தமுன்னபிய்யீன் என்ற சொல் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நுபுவ்வத்தின் மீது இருக்கின்ற இறைவனின் ஒரு முத்திரையாகும். இந்த முத்திரை ஒருபோதும் உடைந்து போக சாத்தியமே இல்லை.

ஆயினும் முஹம்மது (ஸல்) அவர்கள் ஒரு முறையல்ல; ஆயிரம் முறை உலகில் பிரதிபிம்பமாகத் தோன்றுவதும், பிரதிபிம்பமான முறையில் வேறு பல முழுமை பெற்ற தன்மைகளுடன் தமது நுபுவ்வத்தை வெளிப்படுத்துவதும் சாத்தியமேயாகும். இந்தப் பிரதிபிம்பமான நிலை இறைவன் புறமிருந்து நியமிக்கப்பட்ட ஒரு பதவியாகும். இதைப் பற்றி இறைவன்,

وَ آخَرِيْنَ مِنْهُمْ لَمَّا يَلْحَقُوْا بِهِمْ

**(வ ஆஹரீன மின்ஹும் லம்மா யல்ஹகூ பிஹிம்)**

மேலும் இதுவரை அவர்களுடன் சேராத மற்றவர்களுக் கிடையிலும் (அவரை எழுப்புவான்) என்று கூறுகிறான். (62:3)

தங்கள் பிரதிபிம்பமாகத் தோன்றுகிறவர்கள் குறித்து நபிமார்களுக்கு எவ்வித தன்மானக் குறைவும் ஏற்படுவதில்லை. ஏனெனில் தோன்றுகிறவர்கள் நபிமார்களின் தோற்றமாகவும், அவர்களின் உருவமாகவுமே திகழ்கிறார்கள். ஆனால் இவர்களைத் தவிர வேறு யாரும் (சுதந்திரமாக) வருவதால் அவர்களுக்கு நிச்சயமாக அவமானம் உண்டாகும்.

மிஃராஜ் இரவில் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஹஸ்ரத் மூஸா (அலை) அவர்களின் அந்தஸ்தை விடவும் முன்னேறிச் சென்றதைக் கண்ட ஹஸ்ரத் மூஸா நபி (அலை) அவர்கள் கண்ணீர் விட்டுத் தமது தன்மான உணர்வை வெளிப்படுத்தியதைச் சிந்தித்துப் பாருங்கள்.

இவ்வாறு உமக்குப் பிறகு உம்மை விட்டும் பிரிந்த வேறான ஒரு நபி வரமுடியாதென்று இறைவன் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பார்த்துக் கூறியிருக்கும் போது, இக்கூற்றிற்கு முற்றிலும் மாற்றமாக அவர்களுக்குப் பிறகு சுதந்திரமான நபியாகிய





ஈஸா (அலை) அவர்களை இறைவன் அனுப்புவதென்பது, ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு எந்த அளவுக்கு கண்ணியக்குறைவையும் அவமானத்தையும் ஏற்படுத்தும்!

சுருக்கமாக, பிரதிபிம்பமான நுபுவ்வத்தால் கத்மே நுபுவ்வத்திற்கு எந்த விதமான குறைவும் ஏற்படுவதில்லை, அதன் முத்திரை உடைவதுமில்லை. ஏதாவதொரு சுதந்திரமான நபி வருவதால் இஸ்லாத்திற்கு அவமானமும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு மகிமைக் குறைவும் உண்டாகும்.

இந்த நம்பிக்கையினால் தஜ்ஜாலைக் கொல்லக்கூடிய மகிமை மிக்க பணி ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்களின் கையினாலேயே நடக்கும் என்று நம்ப வேண்டி வருவது மட்டுமல்லாமல் அந்தப் பணியை ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களால் செய்ய முடியாதென்று கருத வேண்டியதும் வரும். மேற்கண்ட நம்பிக்கையினால்,

وَلٰكِنْ رَسُوْلَ اللّٰهِ وَ خَاتَمَ النَّبِيِّيْنَ

**(வலாகிர் ரஸூலல்லாஹி வ காதமன்னபிய்யீன்)**

அவர் அல்லாஹ்வின் தூதராகவும் நபிமார்களுக்கெல்லாம் முத்திரையாகவும் விளங்குகின்றார்.(33:41) என்ற வசனம் (நஊதுபில்லாஹ்) பொய்யாகி விடுகிறது. இந்த வசனத்தில் ஒரு முன்னறிவிப்பு மறைந்திருக்கிறது. அதாவது இறுதி நாள் வரை நபித்துவத்தின் மீது முத்திரை பதிக்கப்பட்டிருக்கிறது. ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தோற்றமாகவே விளங்குகின்ற, அவர்களின் பிரதிபிம்பமாகவே இருக்கின்றவரைத் தவிர வேறு எவராலும் நபிமார்களைப் போன்று இறைவனிடமிருந்து தெளிவான எந்த மறைவான ஞானத்தையும் பெற முடியாது. பிரதிபிம்பமானவர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் உருவமாகவே இருப்பதால் அத்தகையவரே இதைப் பெறமுடியும்.

இதன்படி முற்காலங்களிலிருந்தே முஹம்மதின் பிரதிபிம்பமாக வாக்களிக்கப்பட்டவன் நானாகவே இருக்கிறேன். எனவே பிரதிபிம்பமான முறையில் எனக்கு நுபுவ்வத் அளிக்கப்

பட்டிருக்கிறது. தற்பொழுது முழு உலகமும் முத்திரை இடப்பட்ட இந்த நுபுவ்வத்தின் முன் நிற்க சக்தியற்றதாக இருக்கிறது. முஹம்மதின் முழுமையான தன்மைகளைக் கொண்ட முஹம்மதின் பிரதிபிம்பமானவர் இறுதிக் காலத்தில் தோன்றுவார் என்பது முன்னரே விதிக்கப்பட்டிருந்தது. அதன்படி அவர் தோன்றிவிட்டார். இப்பொழுது இந்த வாசல் வழியாக அல்லாமல் வேறு எந்த வாசல் வழியாலும் நுபுவ்வத்தின் ஊற்றிலிருந்து நுபுவ்வத்தின் தண்ணீரை அருந்த முடியாது.

சுருங்கக் கூறுவதென்றால், பிரதிபிம்பமான முறையிலுள்ள நுபுவ்வத்தினாலும், ரிஸாலத்தினாலும் காதமிய்யத்தின் முத்திரை உடைவதில்லை. ஆனால் ஈஸா (அலை) அவர்கள் மீண்டும் வருவார் என்ற சிந்தனை,

وَلٰكِنْ رَّسُوْلَ اللّٰهِ وَ خَاتَمَ النَّبِيّٖنَ

**(வலாகிர் ரஸூலல்லாஹி வ காதமன்னபிய்யீன்)**

அவர் அல்லாஹ்வின் தூதராகவும், நபிமார்களுக்கெல்லாம் முத்திரையாகவும் விளங்குகின்றார் (33: 41)

என்ற வசனத்தை பொய்யாக்குவது மட்டுமல்லாமல், காதமிய்யத்தின் முத்திரையையும் உடைத்து விடுகின்றது. மிகவும் மாற்றமான, வீணான இக்கொள்கையைப் பற்றி ஒரு அறிகுறியேனும் திருக்குர்ஆனில் நம்மால் காண முடியாது. இது மேற்சொன்ன திருக்குர்ஆன் வசனத்திற்கு முற்றிலும் மாற்றமான கொள்கையாக இருப்பதால் இதனை எவ்வாறு சரியானது என்று கூற முடியும்? ஆனால் பிரதிபிம்பமான முறையில் ஒரு நபியும் ரஸூலும் வருவது திருக்குர்ஆனில் இருந்து நிரூபணமாகிறது. இதை

وَ آخَرِيْنَ مِنْهُمْ

**வ ஆஹரீன மின்ஹும்** (62:4) என்ற வசனத்திலிருந்து நாம் அறிகிறோம்.

இந்த வசனத்தில் அமைந்துள்ள அழகான அறிகுறி





என்னவென்றால், சஹாபிகளாக (நபிகள் நாயகத்தின் தோழர்களாக) வருணிக்கப்பட்ட அந்தக் கூட்டத்தினரைப் பற்றிய விபரமே இதில் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் எந்த வாக்களிக்கப்பட்ட மஸீஹ் மூலமாக அ(வரைப் பின்பற்றிய)வர்கள் சஹாபிகள் என வருணிக்கப்பட்டார்களோ மேலும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தர்பிய்யத்தின் கீழ் இருப்பவர்களாகக் கருதப்பட்டார்களோ அந்த பிரதிபிம்பமானவரைப் பற்றி விரிவாக இவ்வசனத்தில் கூறப்படவில்லை. இந்தப் பிரதிபிம்பமானவரின் விபரத்தைப் பற்றிக் குறிப்பிடாது விட்டுவிடக் காரணம் என்னவென்றால், குறிப்பிடப்பட்ட இப்பிரதிபிம்பமானவர் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை விட்டும் பிரிந்து தனிப்பட்ட முறையில் ஒரு சுதந்திரமான தன்மையை உடையவரல்லர் என்பதைக் காட்டுவதற்கே ஆகும். எனவே இவரது பிரதிபிம்பமான நுபுவ்வத் - ரிஸாலத்தின் காரணத்தால் காதமிய்யத்தின் முத்திரை உடையவில்லை. எனவே தான் இந்த வசனத்தில் அவரைக் குறித்து வெளிப்படையாக குறிப்பிடாமல் விடப்பட்டுள்ளது. மேலும் இவ்வசனத்தில் அவருக்குப் பதிலாக ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளார்கள். அவ்வாறே,

اِنَّا اَعْطَيْنٰكَ الْكَوْثَرَ

**இன்னா அஃதய்னாகல் கவ்ஸர்**

நிச்சயமாக நாம் உமக்கு மிகுதியான நன்மையினை வழங்கியுள்ளோம். (108:2) என்ற வசனத்திலும் பிரதிபிம்பமான ஒருவரைப் பற்றி வாக்களிக்கப்பட்டிருக்கிறது. அவரது காலத்தில் கவ்ஸர் என்ற மிகுதியான நன்மைகள் வெளியாகும் எனக் கூறப்பட்டிருக்கிறது. அதாவது ஆத்மீக அருள்களின் நீரூற்றுகள் வெளிப்படும். மேலும் அதன் மூலம் உலகில் இஸ்லாத்தை உண்மையாக ஏற்றுக்கொள்பவர்கள் அதிகமாகி விடுவர். இந்த வசனத்திலும் உலகியல் ரீதியான (வெளிப்படையான) சந்ததிகளின் தேவை அற்பமாகக் கருதப்பட்டு பிரதிபிம்பமான சந்ததியைப் பற்றி முன்னறிவிக்கப்பட்டிருக்கிறது.

நான் இஸ்ராயீல் சந்ததியைச் சேர்ந்தவனாகவும் ஹஸ்ரத் ஃபாத்திமா (ரலி) அவர்களின் சந்ததியைச் சேர்ந்தவனாகவும்

இருக்கக்கூடிய பாக்கியத்தை இறைவன் எனக்கு வழங்கிய போதிலும், இவ்விரு குடும்பங்களின் இரத்தங்கள் என் நரம்புகளில் ஓடுகின்ற சிறப்பை நான் அடைந்த போதிலும், நான் ஆத்மீக உறவையே முதன்மையாகக் கருதுகிறேன். எனது பிரதிபிம்பமான தன்மையே இந்த ஆத்மீக உறவாகும்.

இப்போது நான் எழுதியவற்றின் நோக்கம் என்னவென்றால், அறிவற்ற எதிரிகள் என்னைக் குறித்து, இவர் நபியெனவும், ரஸூலெனவும் வாதிடுகிறார் எனக் குற்றம் சுமத்துகிறார்கள். ஆனால் அவர்கள் நினைப்பது போன்ற வகையில் நபியாகவும் ரஸூலாகவும் நான் இருக்கவில்லை. அப்படிப்பட்ட வாதமும் நான் செய்யவில்லை. நான் தற்போது விவரித்திருக்கும் முறையில் நபியாகவும், ரஸூலாகவும் இருக்கிறேன். எவர் தீய எண்ணத்துடன் நான் நுபுவ்வத், ரிஸாலத் ஆகிய வாதங்களைச் செய்திருப்பதாக என்மீது குற்றம் சுமத்துகிறாரோ அவர் பொய்யராகவும், தூய்மையற்ற எண்ணம் உடையவராகவும் இருக்கிறார். பிரதிபிம்பமான நிலையே என்னை ரஸூலாகவும், நபியாகவும் ஆக்கியிருக்கிறது.

இதன் அடிப்படையிலேயே இறைவன் என்னைப் பலமுறையும் **நபியுல்லாஹ்** என்றும் **ரஸூலுல்லாஹ்** என்றும் பெயரிட்டு அழைத்துள்ளான். ஆனால் இது பிரதிபிம்பமான நிலைமையிலாகும். எனது சுய ஆத்மா இடையில் இல்லை. மாறாக ஹஸ்ரத் நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்களே இதில் இருக்கிறார்கள். இதனாலேயே எனது பெயர் முஹம்மது என்றும் அஹ்மது என்றும் ஆனது. எனவே நுபுவ்வத்தும் ரிஸாலத்தும் வேறு எவரிடத்திலும் செல்லவில்லை. முஹம்மது (ஸல்) அவர்களுக்குரியது முஹம்மது (ஸல்) அவர்களிடத்திலேயே இருக்கின்றது.

**அலைஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாம்.**

இறைவனது அருளும் சாந்தியும் அவர் மீது உண்டாகட்டும்.

5, நவம்பர், 1901 — எளியவன்

காதியான் — **மிர்ஸா குலாம் அஹ்மது**



ஒரு தவறான எண்ணம் அகற்றப்படுகிறது